needs some palatable dishes? What arrangements have the Government made for the consumers of wheat to supplement their diet so that it may be a substantial one?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There is nothing that the Government can do. It is only for the consumers to think of what nutritious food they should take.

SRI A. A. RASHEED : In order to popularise the consumption of wheat, is there a proposal to decontrol the movement of wheat in this country?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The hon. Member may except it in due course and there is no difficulty about getting wheat.

*Coir*

*** 363 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN :** கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பனைமரம், தென்னை முதலியவைகளால் தயாராகும் கயிறுகள் எந்த அளவுக்கு எந்தெந்த நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன?

(இ) இல்லை என்றால், ஏற்றுமதி செய்யும் உத்தேசம் உண்டா?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) & (*b*) Yarn made out of palmyrah fibre (or coir fibre) is not exported to foreign countries. But palmyrah fibre worth Rs. 1·46 crores was exported to Belgium, Holland, U.S.A., United Kingdom, Canada, Australia and New Zealand during the years 1955–60.

**SRI A. VEDARATHNAM :** இறக்குமதி செய்யப்பட்ட பனை நாரைக் கொண்டு வெளிநாடுகளில் என்னென்ன தொழில்கள் செய்கிறார்களோ, அந்தத் தொழில்களை நம்முடைய நாட்டிலேயே நடத்தி, இங்கேயே செய்து 'பினிஷ்டு பிராடக்ட்ஸ்'-ஆக வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதற்கு அரசாங்கம் ஏதாவது முயற்சி செய்யுமா?

**THE HON. SRI R. VENKATARAMAN :** அவர்கள் இதை எடுத்துக்கொண்டு பிரஷ் செய்கிறார்கள். அதை நாமும் செய்கிறோம். ஆனால் நாம் செய்கிற பிரஷை அவர்கள் வாங்குவதில்லை.

*Film*

*** 364 *Q.*— SRI T. T. DANIEL :**
**SRI K. R. NALLASIVAM :**
**SRI S. M. ANNAMALAI :**
} கனம் கைத்தொழில்அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

நீலகிரி ஜில்லா ஊட்டியில் கச்சா பிலிம் உற்பத்தி தொழிற்சாலை ஆரம்பிக்கும் முயற்சி எந்த அளவில் உள்ளது?

18th February 1961]

THE HON. SRI R. VENKATARAMAN : The selection of site for the photographic raw film factory at Ootacamund has been finalized. The Government of India have formed a company by name "Hindustan Photo Films Manufacturing Company" for establishing and running this factory. Preliminary arrangements have been taken on hand.

**SRI S. M. ANNAMALAI:** இந்தத் திட்டத்திற்கு வேறு நாடுகள் ஏதாவது உதவி செய்வதற்கு முன் வந்திருக்கிறதா? அப்படியானால் ஏன் காலதாமதம் ஆகிறது? எப்பொழுது இத் திட்டத்தை ஆரம்பிக்க உத்தேசிக்கப்பட்டிருக்கிறது?

**THE HON. SRI R. VENKATARAMAN:** இதிலே காலதாமதம் ஒன்றும் ஆகவில்லை. பாக்டரி வைக்கவேண்டுமென்று சொன்ன வுடனே பாக்டரி வந்துவிடாது. எல்லாவிதமான பூர்வாங்க ஏற் பாடுகளும் நடந்தபிறகுதான் அதைத் துவங்க முடியும். பிரெஞ்சு "கொலாபொரேஷனுடன்" இதை நடத்துவதாக ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

**SRI N. R. THIAGARAJAN :** அட்டைக் கத்தியை வைத்துக் கொண்டு நிஜக்கத்தி என்று சொல்லி சண்டை போடுவதும், பொம்மைப் புலியை வைத்துக்கொண்டு நிஜப் புலியுடன் சண்டை போடுவதாகச் சொல்லும் போலிப் படத் தயாரிப் பாளர்கள் நீலகிரியில் உற்பத்தியாகும் பிலிம் தரமாக இராது என்று சொல்லுகிறார்களே, இந்த அட்டைக் கத்தி வீரர்களைத் திருப்தி செய்யும் வகையில் நல்ல பிலிம் தயாரிக்க முடியாதா? (சிரிப்பு).

**THE HON. SRI R. VENKATARAMAN :** சபாநாயகர் அவர் களே, கனம் அங்கத்தினர் பேசின தமிழ் எனக்குப் புரியவில்லை.

**MR. SPEAKER :** கடைசியில் பேசினது மட்டும்தான் எனக்கும் புரிந்தது.

**SRI J. MATHA GOWDER :** தொழிலை ஆரம்பித்த பிறகு எத்தனை பேர்களுக்கு வேலை வாய்ப்புகள் கொடுக்க முடியு மென்று சொல்லமுடியுமா? அந்த ஜில்லா மக்களுக்கு வேலை வாய்ப்புகள் அதிகமாக கிடைக்கக்கூடிய அளவுக்கு ஒரு சத விகிதம் அவர்களுக்கு கொடுக்கவேண்டுமென்ற உத்தரவை சர்க் கார் பிறப்பிக்குமா?

**THE HON. SRI R. VENKATARAMAN :** ஒவ்வொரு இடத்திலும் தொழிலை நடத்துகிறபொழுது, அந்த இடத்திலே உள்ளவர் களுக்கு ஒரு சதவிகிதத்தை ஒதுக்க முடியாது. அது நியாயம் அல்ல. ராஜ்யத்திலே இருக்கிற எல்லா மக்களுக்கும் வேலை கிடைக்கவேண்டும். எத்தனை பேர்களுக்கு வேலை கிடைக்கு மென்று இப்பொழுது சொல்லுவது அசாத்தியம். காலம் பிடிக்கும்.

**SRI A. V. P. ASAITHAMBI :** பிரெஞ்சுக் கம்பெனியுடன் ஏதோ ஒப்பந்தம் செய்திருப்பதாக அமைச்சர் சொன்னார்கள்.

இந்தக் கம்பெனியார் மூலம் தயாரிக்கப்படுகிற பிலிம் கோடக் கம்பெனியார் பிலிம்களைப்போல் அவ்வளவு தரம் உள்ளதாக இருக்காது என்ற சர்ச்சை எழுந்திருக்கிறதே. இதைப்பற்றி அமைச்சர் அவர்களின் கருத்து என்ன?

THE HON. SRI R. VENKATARAMAN : அவரவர்கள் அவரவர் களுடைய சரக்கை நல்லது என்று சொல்லுவதுதான் உலக இயல்பு. கோடக் கம்பெனிக்காரர்கள் தங்களுடைய பிலிம் நல்லது என்று சொல்லுவதுதான் வழக்கம். அந்த கோடக் கம்பெனியிடமிருந்து கடன் வாங்குகிறவர்களும் அப்படியேதான் சொல்லுவார்கள். இந்த பிரெஞ்சுக் கம்பெனியார் பிலிம்கள் செய்துகொண்டிருக்கிறார்கள். அவைகளும் நல்ல முறையில் செலவாகிக்கொண்டு வருகின்றன. ஆகவே இந்தமாதிரி வதந்தி களுக்கு இடம் கொடுக்கக்கூடாது.

THE HON. SRI C. SUBRAMANIAM : சமீபத்திலே நான் பிரான்சுக்குச் சென்ற பொழுது, இந்தக் கம்பெனிக்கும் சென்று பார்த்தேன். முன்னேற்றகரமான இயந்திரங்களை வைத்துக் கொண்டு உற்பத்தி செய்யக்கூடிய கம்பெனிகளில் இந்தக் கம்பெனி முக்கியமானது என்று சொன்னார்கள். கோடக் கம்பெனியையும் பார்த்தேன். அவர்களுடைய பிலிமையும் பார்த்திருக்கிறேன். இது இரண்டிற்கும் வித்தியாசம் இல்லை என்பது என்னுடைய கருத்து.

SRI N. MAHALINGAM : ஆரம்பத்தில் கோடக் கம்பெனி யார் நமக்கு அவர்களுடைய ஒத்துழைப்பைத் தர தயாராயில் லாமல் இருந்தார்களா? அதற்குப் பின்னர்தான் பிரெஞ்சுக் கம்பெனியுடன் ஏற்பாடு செய்யப்பட்டதா? அதற்குப்பிறகு கோடக் கம்பெனி ஏஜெண்டுகள் இந்த நாட்டில் வியாபாரம் கெட்டுப்போகுமென்று நினைத்து இந்தமாதிரிப் பிரசாரம் செய்வது உண்மையா?

MR. SPEAKER : I think this question has not been put in the manner in which it should be put. It is out of order. I will not allow discussion on a private company in this House.

### *Mica*

* 365 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) Whether mica is available in Kottaiyiruppu near Tiruppattur in East Ramanathapuram district; and

(*b*) if so, the steps taken to exploit the same?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) & (*b*) Mica occurs in pegmatite veins in a drinking water Oorani in Kottaiyiruppu and underneath a bridge on the Sivaganga–Tiruppathur Road in small quantities. The size and quality are not up to the usual commercial standards generally marked in India or exported.